ஓம் நமோ வேங்கடேசாய

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல்

SVBC TTD

# கோவிந்தம் - பரமானந்தம்

திருமலையான் நித்திய சேவைகள் - பூஜைவிதி



திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி.




# கோவிந்தம் - பரமானந்தம்

## (திருமலையான் நித்ய சேவைகள் - பூஜைவிதி)



வெளியீடு:
ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல்
திருமலை திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி
2012

கோவிந்தம் – பரமானந்தம்
(திருமலையான் நித்தியசேவைகள் – பூஜைவிதி

பரிசோதகர் : டாக்டர் வேதாந்தம்
ஸ்ரீவிஷ்ணுபட்டாசார்யர்
தி.தி.தே. ஆகம ஆலோசகர்

தெலுங்கில் : ஜுலகன்டி பாலசுப்ரமண்யம்

உதவியாளர்கள் : தாமா முரளிகிருஷ்ணா,
சிவுகுல ஸ்ரீநிவாஸ்

தமிழாக்கம் : டாக்டர் வி.ஜி. சொக்கலிங்கம்
தி.தி.தே. ஸப்தகிரி, துணையாசிரியர்

முதற் பதிப்பு : 2012

பிரதிகள் :

விலை : இலவசம்

வெளியிடுவோர் : செயலாட்சித் தலைவர்
தி.தி. தே. திருப்பதி.

டிடிபி : திருமலை திருப்பதி
தேவஸ்தான அச்சகம், திருப்பதி.

அச்சகம் : லவ்லி ஆப்செட் பிரிண்டர்ஸ் (பி) லிட்.

## அணிந்துரை

திரு. கனுமுரிபாபிராஜு, எம்.பி., தலைவர்
அறக்கட்டளைக் குழு, தி.தி. தே

கோவிந்தம் - பரமானந்தம், என்னும் இந்தச்சிறிய புத்தகம் எம்பெருமானின் நித்திய சேவைகள், வாராந்திர சேவைகளைக் குறித்து நேர்த்தியாக கண்முன் நிறுத்தும் விதத்தில் எளிய தமிழ் நடையில் சாதாரண மக்களுக்கும் புரியும் வகையில் எழுதப்பட்டுள்ளது. பக்தி உணர்வு ஒவ்வொரு பக்தனுக்கும் அவசியம். பக்தியால் சாதிக்கமுடியாதது ஒன்றுமில்லை.

வெள்ளிவாயில் பிரகாரத்தில் ஆனந்த நிலைய வாசனுக்கு நடைபெறும் சுப்ரபாதம் முதலான சேவைகளை மாதிரி ஆலயத்தில் சித்தரீகரித்து பக்தகோடிகளுக்கு அளிக்க வேண்டும் என்பது எங்கள் அறக்கட்டளைக் குழுவின் நிர்ணயம். ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் மூலம் அதிவிரைவில் இந்த சேவைகளை ஒளிபரப்பப்படும். இதுவரை கல்யாணோத்ஸவம், பிரம்மோத்ஸவம் முதலான சேவைகளை ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் நேரடியாக காண்பித்து பக்தர்களை ஆனந்தத்தில் ஆழ்த்தி வருகிறது.

ஆன்மீக பக்தி இயக்கத்தில் அனைவரும் ஸ்ரீ வேங்டேஸ்வரஸ்வாமியின் திருவருளைப் பெற்று உய்வு

பெற வேண்டும் என்னும் முயற்சியின் ஒரு பகுதியாக பூஜை நெறிமுறைகள், கோவிந்த நாமாவளியை இச்சிறிய புத்தகத்தில் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன. பக்தர்கள் இவ்வாய்ப்பினை பயன்படுத்திக்கொண்டு ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் விருப்பத்தினை நிறைவேற்றுவீர்கள் என நம்புகிறோம்.

இச்சிறிய புத்தகம் மூலம் எல்லையற்ற ஆனந்தத்தைப் பெறுகின்றேன்.

சேஷாத்ரி நிலயா கோவிந்தா

திரு. எல்.வி. சுப்ரமண்யம், ஐ.ஏ.எஸ்
செயலாட்சித்தலைவர், தி.தி.தே.

சகலலோக அதிபதி. தேவாதி தேவன். படைத்தல், காத்தல், அழித்தல் தொழிலை மேற்கொள்ளும் திருவேங்கடமுடையானின் தரிசன பாக்கியமே இக்கலியுகத்தில் முக்தி வழியாகும். திருமலை திவ்ய தேசத்தில் அர்ச்சா மூர்த்தியாக எழுந்தருளியுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி திருக்கோயிலில் அநுநித்யம் அநேக ஆசாரங்களுடன் ஆகம விதிமுறைப்படி வைதீகமாக சுப்ரபாத சேவை முதற்கொண்டு ஏகாந்த சேவை வரை நடைபெறும் நித்திய உத்ஸவங்கள், வார உத்ஸவங்கள், வருட உத்ஸவங்கள் சம்பிரதாய முறைப்படி நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

இவ் உத்ஸவங்களில் சிலவற்றினை மட்டுமே ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் மூலம் நேரடி ஒளிபரப்பு செய்யப்பட்டு வருகிறது. ஆனந்த நிலையத்தில் நடத்தும் நித்திய சேவைகளை, வாராந்திர சேவைகளை நேரடி ஒளிப்பரப்பு செய்வதற்கு சம்பிரதாய முறைப்படி சாத்தியமாகாது. அதனால் மாதிரி திருக்கோயிலில் சுப்ரபாதம் முதலான சேவைகளை சித்தரீகரித்து பக்தர்களனைவருக்கும் அளிக்க வேண்டும் என்னும் எங்கள் சிறு முயற்சியே இந்த "கோவிந்தம் – பரமானந்தம்". இத்துடன் எம்பெருமானின்

நித்தியபூஜை நெறிமுறைகளையும் சம்பிரதாய முறைப்படி ஒவ்வொரு பக்தரும் கடைபிடித்து தரிசிக்குமாறு கேட்டுகொள்கிறேன். இப்புத்தகம் மூலம் ஒவ்வொரு பக்தரின் மதி பரமானந்தம் பெற வேணுமாய் எம்பெருமானை பிரார்த்தித்து...

நித்திய சுபப்ரதா கோவிந்தா

# முன்னுரை

பாரத பண்பாட்டின் கருவூலம் ஆலயம். நம்முடைய இந்த பரதகண்டத்தில் போற்றப் பெறுகின்ற பிரதான ஆலயங்களில், சம்பரதாயத்தைப் பேணுவதில் முதன்மையானது ஸ்ரீ வேங்கடேஸ்வரஸ்வாமி திருக்கோயில். இத்திருக்கோயில் வேதபுராண இதிஹாச சரித்திர காவிய ஸ்தோத்திரத்திற்கு அதீதமாய், சரித்திரக்காலத்திற்கு முன்பிருந்தே அநேக சம்பிரதாயத்துடன் அநேக ஆசாரத்துடன் வைகானச ஆகம சாஸ்த்திர முறைப்படி. பூஜை நெறிமுறைகளை கடைபிடித்து வருகிறது.

வேங்கடாத்ரி சமம் ஸ்தானம் பிரம்மாண்டே
நாஸ்திகிஞ்சன!
வேங்கடேஸ சமோதேவோ நபூதோ ந
பவிஷ்யதி!!

என்னும் புராணக் கூற்றுப்படி இந்த க்ஷேத்திரத்திற்கு சமமான க்ஷேத்திரம் இல்லை. இந்த தெய்வத்திற்குச் சமமான தெய்வம் இல்லை என்றும் தெரிகின்றது.

இவ் எம்பெருமானின் திருக்கோயிலில் எண்ணற்ற உத்ஸவங்கள், பூஜைகள் வெகு வைபவமாக தினம், தினம் நடத்தப்பட்டு வருகின்றன. அவற்றினை நேரிடையாக பார்க்கமுடியாத பக்தர்களுக்கு ஆத்தீகர்களுக்கு திருமலை திருப்பதி தேவஸ்தானம் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் மூலம் சிலவற்றினை நேரடி ஒளிபரப்பு பண்ணியும், சிலவற்றினை

அலிபிரியில் உள்ள மாதிரி ஆலயத்தில் சித்தரீகரித்து ஒளிபரப்பி ஆன்மீக ஆனந்தத்தை, உணர்வினை உண்டுபண்ணுகிறது.

கோவிந்தம் – பரமானந்தம் என்னும் இந்தச்சிறு புத்தகத்தில் உள்ள எம்பெருமானின் நித்ய சேவைகளை படித்து திருமலையில் இருப்பது போல் எண்ணி ஆன்மீக சைதன்யத்துடன் ஸ்ரீநிவாசனின் பரங்கருணையைப் பெறுவதற்கு புராண முறைப்படி ஷோடஸோ உபசார பூஜா விதிமுறைகளை சுப்ரபாதத்துடன் அஷ்டோத்திர சதநாமாவளியுடன் கதைச் சுருக்கத்துடன் கோவிந்தநாமத்துடனும் தொகுத்து வெளியிடப்படுகிறது.

பக்தர்கள் தம் வீட்டிலிருந்தே ஸ்ரீ வேங்கடேஸ்வரஸ்வாமி உத்ஸவங்களை இந்தச் சேனல் மூலம் பார்த்து பரவசமடைந்து புனிதர்களாய் எம்பெருமானின் திருவருளைப் பெற்றுய்ய வேண்டுகிறது ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல்

## இவற்றில் ....

1. திருமலையான் நித்தியசேவைகள்

2. ஸ்ரீ நிவாசஸ்துதி

3. ஸ்ரீ வேங்கடேஸ்வர பூஜை கல்பம்

4. ஸ்ரீ வேங்கடேஸ்வர அஷ்டோத்தர சதநாமாவளி

5. க்ஷமா பிரார்த்தனை

6. கதைச் சுருக்கம்

7. கோவிந்த நாமாவளி

## திருமலையான் நித்தியசேவைகள்

சகலலோக சார்வபௌமனான ஸ்ரீநிவாசனுக்கு நித்ய சேவைகள், மற்றும் எத்தனையோ உத்ஸவங்கள் வழிவழியாய் தடையின்றி செய்யப்பட்டு வருகின்றது எப்பொழுது தொடங்கப்பட்டதாயினும் இச்சேவைகள் வைபவம் என்றென்றும் வெகு விமர்சையாக நடைபெற்று வருகிறது. ஆனந்த நிலையானுக்கு அனந்தகீர்த்தியையும், எம்பெருமான் பக்தர்களுக்கு ஆன்மீக சைதன்யஸ்பூர்த்தியையும் இது அளிக்கிறது. தலைமுறைகள் மாறினாலும் குறையாத பக்தி சிரத்தையுடன் பக்தகோடிகளை திளைக்கச் செய்கின்றன.

சுப்ரபாதப் பாடலை பாடி நவநீத ஹாரத்தியை ஏற்றுக்கொண்டு விஸ்வரூப தரிசனத்தைக் காட்டும் எம்பெருமான், அநேக நித்ய சேவைகளையும் ஏற்று, இரவு ஏகாந்த சேவையில் இறுதியாக முத்து ஹாரத்தியுடன் துயில்கின்றான்.

இங்ஙனே ஒவ்வொரு நாளும் சுப்ரபாத நவநீத ஹாரத்தி முதல் இரவு ஏகாந்த சேவை முத்து ஹாரத்தி வரை நடைபெறும் திருமலையான் நித்ய சேவை வைபவத்தை சாமான்ய பக்தர்களுக்கு கொண்டு செல்லும் நோக்கமே இந்த

"கோவிந்தம் – பரமானந்தம்"

சுப்ரபாத சேவை

கௌசல்யா சுப்ரஜா ராம! பூர்வா சந்த்யா ப்ரவர்ததே!
உத்திஷ்ட நரசார்தூல ! கர்தவ்யம் தைவமாஹ்நிகம்!!

ஆழ்வார்கள் கூற்றுப்படி வழிவழியாய் ஆட்செய்யப்பட்டுவரும் கைங்கர்யங்களில் ஒன்று எம்பெருமானை துயிலெழுப்பும் திருப்பள்ளி உணர்த்தும் சேவையே சுப்ரபாத சேவையாகும். இதுவே ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதமாகும் 29 ஸ்தோத்திரங்கள் உள்ள சுப்ரபாதத்தையும், 11 ஸ்லோகங்கள் உள்ள ஸ்தோத்திரத்தையும், 16 ஸ்லோகங்கள் உள்ள ப்ரபத்தியையும், 14 ஸ்லோகங்கள் உள்ள மங்களாசாஸனத்தையும் 15ம் நூற்றாண்டில் ஸ்ரீ மணவாள மாமுனி சீடரான பிரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸ்வாமி எழுதினார். இந்த திவ்ய கானத்தை எங்கு கேட்டாலும், மனது திருமலை க்ஷேத்திரத்தை சென்றடைகிறது. இத்தகு மகிமை பொருந்திய இந்த சுப்ரபாத கீதத்தினை, திருமலையில் சுப்ரபாத சேவை நடைபெறும் விதத்தினைக் குறித்து தெரிந்துகொள்வோம்.

ஒவ்வொரு நாளும் பிரம்ம முகூர்த்தத்தில் (விடியற்காலை 2.30-3.00 மணியளவில்)
திருமலை ஆலயத்தில் திருமலையானுக்கு சுப்ரபாத சேவை நடைபெறுகிறது. அந்த சமயத்தில் சந்நிதி இடையர்,ஸ்நானம் முதலானவற்றை முடித்துக்கொண்டு திருநாமம் தரித்து, தீவட்டி பிடித்துக் கொண்டு திருமலை வடக்கு மாடவீதியில் உள்ள அர்ச்சகர்கள் இல்லத்திற்கு

செல்வார். திருமலையான் கைங்கர்யபரரான வைகானச அர்ச்சக ஸ்வாமிகள் ஸ்நானம், சந்தயாவந்தனம் முதலான அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சித்தமாய் இருப்பர்.

சந்நிதி இடையர் அந்த ஸ்வாமிகளை வணங்கி அவர்களை ஸ்வாமி ஆலயத்திற்கு அழைப்பார். திருமலையான் தங்கவாயிலை திறக்கும் கருவியான குஞ்சகோல் எனப்படும் திறவு கோல் கொத்தினை தோளின் மீது வைத்து சுமந்து வந்து எம்பெருமானை நினைத்து சந்நிதி இடையரை பின்தொடர்வார்.

இங்ஙனே அர்ச்சகஸ்வாமிகள் மஹாத்துவாரம் அருகே சென்ற உடனே நகாரா மண்டபத்தில் பெரிய பலகை மணி (நொடத்கானா) யை எச்சரிக்கைகாக ஒலிக்கச்செய்வர். அந்த மணியோசையுடன் மஹாத்துவாரம் திறக்கப்படுகிறது. சந்நிதி இடையரை பின் தொடர்கின்ற அர்ச்சக ஸ்வாமிகள் பிரதான துவார தேவதைகளுக்கு மந்திரபூர்வமாக நமஸ்கரித்து ஆலயத்திற்குள் நுழைவர். அவர்களிடம் உள்ள குஞ்சகோலினை, சாவி பூட்டினை துவஜஸ்தம்பம் அருகே உள்ள க்ஷேத்திர பாலகர் சிலைக்கு பக்தியுடன் தொடவைத்து வணங்கி துவஜஸ்தம்பத்தினை பிரதக்ஷிணமாக வெள்ளிவாயிலை கடந்து, தங்க வாயில் முன்பு மௌனமாக ஸ்வாமியை தியானித்துக் கொண்டிருப்பர்.

அவர்களை அங்கு விட்டுவிட்டு சந்நிதி இடையர் மறுபடியும் திருமலையான் சந்நிதி வீதியில் உள்ள பேடி ஆஞ்சநேயஸ்வாமி கோவில் அருகே உள்ள ஸ்ரீமான்

பெரிய ஜீயர்மடத்திற்கு வருவார். அங்கு சித்தமாய் உள்ள ஜீயர்ஸ்வாமி (அ) பரிசாரகரான ஏகாங்கியை அழைத்துக் கொண்டு ஆலயத்திற்குள் வருவார் அச்சமயத்திற்குள் ஆலய அதிகாரியான பேஸ்கார், திருமலையான் சுப்ரபாதத்தினை சேவிக்கும் வேதபண்டிதர்கள் தங்க வாயில் முன்பு நின்றிருப்பர். அங்ஙனே தாள்ளபாக அன்னமய்யா வம்சத்தை சார்ந்த ஒருவர் தம்புராவினை கையில் ஏந்தி, துயிலெழுப்பு சங்கீர்த்தனையை பாடுவதற்கு சித்தமாய் இருப்பார். இதற்கிடையில் சுப்ரபாத சேவைக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள கட்டணத்தை செலுத்திய பக்தர்கள் தங்க வாயில் முன்பே அனுமதிக்கப்படுவர்.

அர்ச்சக ஸ்வாமிகள், ஜீயர்ஸ்வாமிகள் ஆலய அதிகாரிகள், வேதபண்டிதர்கள், தாள்ளபாக்கத்தார், சந்நிதி இடையர், சுப்ரபாத சேவை பக்தர்கள் இவர்கள் அனைவரின் முன்னிலையில் அர்ச்சகஸ்வாமிகள் தம்மிடம் உள்ள குஞ்சுகோலினைக் கொண்டு தங்க வாயிலுக்கு உள்ள சிறிய துளையின் மூலம் உள்ளே போடப்பட்டுள்ள தாழ்ப்பாளைத் திறப்பார். அதன் பின்னர் தாழ்ப்பாளுக்கு போடப்பட்டுள்ள பூட்டினை அர்ச்சகர்கள் தம்மிடம் உள்ள சாவியினைக் கொண்டு திறப்பார். அதன் பின்னர் சந்நிதி இடையர் பேஸ்கார் இடம் உள்ள சீல் வேயப்பட்ட சிறிய பையில் உள்ள சாவியினைக் கொண்டு சீல் வேயப்பட்ட மூன்று பெரிய பூட்டுகளை அனைவருக்கும் காண்பித்து திறப்பார்.

தங்கவாயில் திறந்து கொண்டு சந்நிதி இடையர் தீவட்டியுடன் முன்னர் உள்ளே நுழைவார். மறுவினாடி அர்ச்சகஸ்வாமிகள் உச்ச ஸ்வரத்துடன் ''கௌசல்யா சுப்ரஜாராமா''......... என்று சுப்ரபாதத்தினை பாடிக் கொண்டு தங்கவாயில் உள்ளே நுழைவர். ஏகாங்கி, மஹந்து மடத்தார் கொண்டு வந்த பால், சர்க்கரை, வெண்ணை தாம்பூலம் உள்ள கிண்ணத்தினை எடுத்துக் கொண்டு உள்ளே போவார். தங்கவாயில் மூடப்படும்.

தங்கவாயில் முன்பு உள்ள வேதபண்டிதர்கள், அர்ச்சகஸ்வாமி தொடங்கின சுப்ரபாத கீதத்தினை பற்றிக் கொண்டு ஸ்ருதிலயத்தோடு பாடுவர். ஸ்தோத்திரம், ப்ரபத்தி, மங்களாஸாசனம் முடிந்த உடனே, அன்னமய்யா வம்சத்தவர் தங்கவாயில் முன்னர் நின்று அன்னமய்யா இயற்றிய ஒரு திருப்பள்ளி எழுச்சி கீர்த்தனையை பூபாளராகத்தில் இசைப்பார்.

சுப்ரபாதத்தில் ஸ்ருதியை சேர்த்து அன்னமய்யா திருப்பள்ளி எழுச்சி பாடலைக் கேட்டு, பக்தி பிரபத்தியுடன் மெய் மறந்து போய் உள்ள பக்தர்கள் தங்கவாயில் கதவினை எப்பொழுது திறப்பாரோ? எம்பெருமானின் திவ்விய மங்கள மூர்த்தியினை எப்பொழுது தரிசிக்க முடியுமோ? என்ற ஆவலுடன் காத்திருப்பர்.

தங்கவாயில்களை மூடின சந்நிதி இடையர் இடம் உள்ள தீவட்டி ஒளியினால் அர்ச்சகஸ்வாமிகள் ராமர் மேடைக்கு வேயப்பட்டுள்ள கதவுத்தாளினை திறந்து, சயனமண்டபத்தில் சயனித்துள்ள போக

ஸ்ரீநிவாச மூர்த்திக்கு பிரதட்சணமாக திருச்சந்நிதிக்கு சேர்வர். தீவட்டியுடன் முன்பாக உள்ளே சென்ற சந்நிதி இடையர் குலசேகரப்பட்டி அருகே நின்று, அந்த வெளிச்சத்தில் எம்பெருமானின் திவ்விய மங்கள மூர்த்தியை முதலில் தரிசனம் செய்து கொள்வார். அதன் பின்னர் அர்ச்சக ஸ்வாமிகள், ஏகாங்கி, குல சேகரப்படியைக் கடந்து உள்ளே நுழைகின்றனர்.

இடையர் கையில் உள்ள தீவட்டியை வாங்கி ஏகாங்கி சந்நிதியில் உள்ள தீபங்களை ஏற்ற, சந்நிதி இடையர் ராமர் மேடையில் உள்ள தீபங்களை ஏற்றுகிறார். அதன்பிறகு அர்ச்சக ஸ்வாமிகள் எம்பெருமானிடம் பாத நமஸ்காரம் பண்ணி சயனமண்டபத்தில் உள்ள தங்கப்பட்டு பஞ்சணை மீது துயில்கின்ற ஸ்ரீ போக ஸ்ரீநிவாச மூர்த்தியை நமஸ்கரித்து கைதட்டி, திருப்பள்ளி எழுந்தருளும்படி பிரார்த்திப்பர். பின்னர் போக ஸ்ரீநிவாச மூர்த்தி விக்கிரஹத்தை மூல மூர்த்தி சந்நிதியில் (ஜீவஸ்தானத்தில்) எழுந்தருளப் பண்ணுவர். ஆனந்த நிலையத்தில் உள்ள குலசேகரப்படி அருகே திரையிட்ட பிறகு அர்ச்சக ஸ்வாமிகள் எம்பெருமானுக்கு தந்ததாவனை, ஆசமனாதி அனுஷ்டான கிரியைகளை சமர்ப்பித்து, மஹந்த்மடத்தார் கொண்டுவந்த நவநீதத்தை, பால், சர்க்கரையை நிவேதநம் செய்து, சுகந்த தாம்பூலங்களை சமர்ப்பிப்பர்.

தங்க வாயில் முன்னர் வேதபண்டிதர்கள் சுப்ரபாதம், மங்களாஸாசனத்தை முடிக்கிறார்கள். உள்ளே அர்ச்சகஸ்வாமிகள் எம்பெருமானுக்கு நவநீத ஹாரத்தி காட்டி கொண்டு இருக்கும் போது தங்க வாயில் கதவுகள் திறக்கப்படுகின்றன. அங்கே காத்திருக்கும் பக்தர்கள் பக்தி சிரத்தையுடன் எம்பெருமானை தரிசிக்கின்றனர். நவநீத ஹாரத்தி வெளிச்சத்தில் சத கோடி மன்மத வடிவினனான எம்பெருமான் அனந்தகோடி திவ்ய ஒளியுடன் தரிசனமளிக்கின்றார். எம்பெருமானின் தங்கத் திருப்பாதங்களின் மீது துளசி, புஷ்பங்கள் முதலியனவை இல்லாது திருப்பாதத்தை தரிசிக்கும் பாக்கியத்தை "விஸ்வரூப தரிசனம்" என்பர்.

நிவேதனத்திற்கு பிறகு அளிக்கும் கற்பூர ஹாரத்தியை 'நவநீத ஹாரத்தி' என்பர். ஹாரத்திக்குப் பின்னர் அர்ச்சகர்கள், கடந்த இரவு பிரம்மாதி தேவர்கள் எம்பெருமானை அர்ச்சிப்பதற்காக கருவறையில் வைக்கப்பட்ட பிரம்மதீர்த்தத்தினை சந்தனத்தை சடாரியை முன்பாக தாங்கள் ஸ்வீகரித்து அதன் பின்னர் ஜீயர் ஸ்வாமிக்கு, ஏகாங்கிக்கு சமர்ப்பிப்பர். சந்நிதி இடையர்க்கும் தீர்த்தம் சடாரியுடன் நிவேதன வட்டிலில் உள்ள தாம்பூலத்தினை அர்ச்சக ஸ்வாமிகள் சமர்ப்பிப்பர்.

அதன் பின்னர் ஜீயர் ஸ்வாமிகள், ஏகாங்கி, சந்நிதி இடையர் தங்க வாயிலைக் கடந்து வெளியே வருவர். தேவஸ்தானம் பரிசாரகர்கள் உள்ளே சென்று

எம்பெருமானின் திருக்கட்டிலை எடுத்து வெளியே உள்ள சபேரா அறையில் வைப்பர். சுப்ரபாதத்தினை பாடிய வேதபண்டிதர்கள், அன்னமய்யா வம்சத்தவர்கள், மஹந்து, மைசூர் சமஸ்தானம் தரப்பினர் மற்றும் ஸ்வாமியின் கைங்கர்யத்தில் பங்குபெற்ற ஸ்தானிகர்கள் ஸ்வாமி சந்நிதிக்குள் சென்று ஹாரத்தி, தீர்த்தம்,சந்தனம், சடாரி மரியாதைகளை பெறுவர். இவர்களுக்கு எம்பெருமானுக்கு நிவேதிக்கப்பட்ட சந்தனம், வெண்ணை பிரசாதமாக அளிக்கப்படுகிறது. அதன் பின்னர் ஆலய அதிகாரிகள், சர்காரு (தேவஸ்தானம்) ஹாரத்தி நடத்தி, தீர்த்த சந்தன நவநீத பிரசாதங்கள் பெற்றுக்கொள்வர். எம்பெருமானின் சுப்ரபாத சேவைக்கு வந்துள்ள பக்தர்கள் வரிசையாக ஸ்வாமி சந்நிதிக்கு சென்று அந்த திவ்விய மங்கள மூர்த்தியை தரிசித்து தீர்த்தம் சடாரிகளை ஸ்வீகரித்து உய்யுபெறுவர்.

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சானல் மூலம் ஒளிபரப்பாகிற எம்பெருமான் சுப்ரபாத சேவையை உங்கள் வீட்டிலிருந்து கண்ணுறுங்கள், திருமலையில் உள்ள அனுபூதியினை பெறுங்கள்.

## தோமாலை சேவை போக ஸ்ரீநிவாச மூர்த்திக்கு அபிஷேகம்

புஷ்ப அலங்கார பிரியனான திருவேங்கட முடையானின் திவ்விய மங்கள மூர்த்திக்கு அநேக புஷ்ப மாலைகளுடன், துளசி மாலைகளோடு செய்யும்

அலங்காரம் தோமாலை சேவை! முந்தய நாள் இரவே அந்தந்த காலத்தில் கிடைத்திடும் பல்வேறு வகையான பரிமள புஷ்பங்களுடன் தயார் செய்யப்பட்ட மாலைகள், யோக நரசிம்ம ஸ்வாமி ஆலயம் அருகே உள்ள புஷ்ப அறையில் தயார் படுத்துவர்.

சேவை நேரத்தில் இந்த மாலைகள் உள்ள மூங்கில் கூடையை ஜீயர் ஸ்வாமி தலைமீது வைக்கப்பட்டு, சத்ர சாமரங்களுடன் பலகை மணி, சின்னடோலு ஒலிக்க, சந்நிதி இடையர் தீவட்டியுடன் வழிகாட்ட புஷ்ப அறையிலிருந்து புறப்பட்டு துவஜஸ்தம்பத்தை பிரதக்ஷிணம் பண்ணி வெள்ளி வாயில் வழியாக உள்ளே வந்து விமான பிரதக்ஷிணம்செய்து தங்க வாயில் வழியாகச் சென்று ஸ்வாமி சந்நிதிக்குள் சமர்ப்பிப்பர்.

அர்ச்சக ஸ்வாமிகள் இந்த மாலைகளை ஸ்வீகரித்து, தண்ணீர் தெளித்து சுத்தம் செய்வர். தோமாலை சேவை செய்வதற்கு முன்னர் போக ஸ்ரீநிவாச மூர்த்திக்கு அபிஷேகம் ஆரம்பமாகும். அபிஷேகத்திற்கு ஆகாச கங்கை தீர்த்தத்தினைக் கொண்டு வருவர். முற்காலத்தில் திருமலையானுக்கு நித்திய அபிஷேக சேவை கைங்கர்யத்தில் ஈடுபட்ட மஹாபக்தர் ஆசாரிய புருஷர் திருமலை நம்பி வம்சத்தவர்கள் இந்த ஆகாச கங்கை தீர்த்தத்தை வெள்ளித் திருக்குடத்தில் திருக்குடை ஆலவட்ட மங்கள வாத்திய மரியாதைகளுடன் கொண்டு வருவர். அவர்கள் வெள்ளி திருக்குடத்துடன் ஆலயத்தை பிரதக்ஷிணம் செய்து கொண்டு எம்பெருமான் திருச்சந்நிதிக்குள் வைப்பர்.

அதன் பின்னர் அர்ச்சக ஸ்வாமிகள் ஸ்வாமியை வணங்கி, போக ஸ்ரீ நிவாசமூர்த்தியை வெள்ளி ஸ்நானடத்துடன் மீது எழுந்தருளப் பண்ணுவர். அர்க்ய, பாத்ய ஆசமன அனுஷ்டான உபசாரங்கள் செய்த பின்னர், ஆகாச கங்கை தீர்த்தத்திலிருந்து எடுத்து வந்த புனித நீரினால் போக ஸ்ரீநிவாச மூர்த்திக்கு அபிஷேகம் பண்ணுவர்.

பின்னர், ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமியின் நிஜபாதங்கள் மீது உள்ள தங்க கவசத்திற்கு அபிஷேகம் பண்ணுவர். பின்னர் வேத பண்டிதர்கள் புருஷசூக்தம் சேவித்துக் கொண்டிருக்க அர்ச்சக ஸ்வாமிகள் எம்பெருமான் திருச்சந்நிதியில் உள்ள நரசிம்ம, ஸ்ரீ ராமர் முதலான சாளக்கிராமங்களுக்கு அபிஷேகம் பண்ணுவர். பின்னர், மூல மூர்த்திக்கு, வக்ஷஃஸ்தல லக்ஷ்மிக்கு, ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை மலையப்ப ஸ்வாமிக்கு, உக்ர ஸ்ரீநிவாச மூர்த்திக்கு இங்ஙனே சந்நிதியில் உள்ள பஞ்சபேரங்களுக்கு அபிஷேகம் செய்தபடி ஆகாச கங்கை தீர்த்தத்தின் சம்ப்ரோக்ஷணம் பண்ணுவர். இந்த அபிஷேகம் நடைபெறும் நாளில் ரோஹிணி நக்ஷத்திரம் இருந்தால், போக ஸ்ரீநிவாச மூர்த்தியுடன் சந்நிதியின் உள்ளே உள்ள ருக்மணி ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமிக்கும் திருமஞ்சனம் (அபிஷேகம்) நடத்தப்படுகிறது. அங்ஙனே புனர்பூச நக்ஷத்திரம் இருந்தால் ஸ்ரீசிதா ராம லக்ஷ்மணர்களுக்கும், திருவோண நக்ஷத்திரமானால் ஸ்ரீதேவி பூதேவி சமேத மலையப்ப ஸ்வாமிக்கும் அபிஷேகம் நடைபெறும்.

அபிஷேகத்திற்குப் பின்னர், போக ஸ்ரீநிவாச மூர்த்திக்கு ஆடை அலங்காரம், திருமண் காப்பு இட்டு, மற்ற உத்ஸவ மூர்த்திகளுக்கு சோடசோபசாரங்கள் பண்ணிக் கொண்டிருக்க ஜீயர்ஸ்வாமிகள் வைஷ்ணவஸ்வாமிகள் திவ்வியப் பிரபந்தமான தொண்டரடிப் பொடியாழ்வார் பாடின திருப்பள்ளி எழுச்சி பாசுரங்களை பாராயணம் பண்ணுவர்.

<u>தோமாலை சேவை (திருமலையானுக்கு புஷ்பலங்காரம்)</u>

நொடிப்பொழுது தரிசனத்தாலே ஆன்மீக ஆனந்தத்தை பிரசாதிக்கும் திவ்விய மங்கள திருவடிவினன் திருவேங்கடமுடையான். அவ்வெம்பெருமானுக்கு நடைபெறும் புஷ்பாலங்காரம் எனப்படும் இந்தத் தோமாலை சேவையினை சாமான்ய பக்தர்களனைவரும் கண்ணுக்கு விருந்தாக கண்டு தரிக்க வேண்டும் எனும் நோக்கில், அலிபிரி மாதிரி ஆலயத்தில் திருமலையான் அர்ச்சக ஸ்வாமிகளைக் கொண்டு தோமாலை சேவையினை நிர்வகித்து ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சானல் சித்திரிகரித்து பக்த கோடிகளுக்கு சமர்ப்பிக்கின்றது.

ஜீயர்ஸ்வாமிகள் பக்திச்ரத்தையுடன் அளிக்கின்ற பூமாலைகளை அர்ச்சக ஸ்வாமிகள் ஸ்வீகரித்து, முன்னர் போக ஸ்ரீநிவாச மூர்த்தியை அலங்கரிப்பர். அதன் பின்னர் மூல மூர்த்திக்கு திருக்கழுத்திற்கும், திருமார்பிற்கும், மலர் மாலைகளை அணிவித்து, சங்கு சக்கரங்களுக்கு,கிரீடத்திற்கு, நந்தக வாளிற்கு அலங்கரிப்பர்.

அதன் பின்னர் திருத்தோளின் மீதிருந்து திருநாபி வரைக்கும், திருஇடைவரைக்கும், திருமுழங்கால் வரைக்கும், திருப்பாதம் வரைக்கும் ஆடும்படிக்கு நீளமான மலர் மாலைகளை அலங்கரிப்பர். இந்த புஷ்பாலங்காரம் திருமலையான் திருப்பாதத்துடன் துவங்கப்படுகிறது. திருப்பாதம் முதற்கொண்டு அலங்கரிக்கப்படும். இந்த மலர் மாலைகளுக்கு சில நிரந்தரமான பெயர்கள் இருப்பது சிறப்பாகும்! திருமலையான் திருப்பாதங்களின் மீது அலங்கரிக்கும் ஒவ்வொரு முழம் கொண்ட இரண்டு மலர் மாலைகளை 'திருவடி மாலைகள் என்பர்' எம்பெருமான் கிரீடத்தின் மீதிருந்து இரண்டு திருத்தோள் வரை அலங்கரிக்கப்படும் 8 முழம் மலர் மாலைகளை 'சிகாமணி' என்றும், எம்பெருமான் திருத்தோளிலிருந்து இரண்டுபுறம் பாதங்கள் வரையிலும் ஆடும்படிக்கு அலங்கரிக்கப்படும் நீளமான மாலைகளை சாளக்கிராம மாலைகள் என்றும், எம்பெருமான் திருக்கழுத்திற்கு இரண்டு பொரையாக திருத் தோள் மீது அலங்கரிக்கப்படும் மூன்றரை முழுமலர் மாலையை கண்டசரி என்பர்.

எம்பெருமான் திருமார்பில் உள்ள ஸ்ரீதேவி பூதேவிகளுக்கு ஒன்றரை முழம் மலர் மாலையை அலங்கரிக்கின்றனர். ஒவ்வொன்றும் ஒவ்வொரு முழம் உள்ள இரண்டு மாலைகளை திருச்சங்கு திருவாழிக்கு அலங்கரிக்கின்றனர். திருமலையான் நந்தகம் என்னும் திருவாளிற்கு அலங்கரிக்கும் இரண்டு முழம் மலர் மாலைகளை கடாரிசரம் என்பர். இரண்டு

திருமுழங்கையிலிருந்து திருப்பாதம் வரையிலும் மாலையாக தொங்கவிடப்படும் மூன்று மலர் மாலைகளை தாவளம் என்பர். இங்ஙனே ஒவ்வொரு மாலையும் சமர்ப்பித் திருக்கும் புதுப்பொலிவுடன் தரிசனமளிக்கின்ற கல்யாண சக்ரவர்த்தியை கண்ணார காண்கின்ற பக்தர்கள் பரமானந்தத்தை பெறுகின்றனர்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் கோதாதேவி கீர்த்தித்த திருப்பாவை பாசுரங்களை பக்திசிரத்தையுடன் கானம் பண்ண, அர்ச்சக ஸ்வாமிகள், ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை மலையப்ப ஸ்வாமிக்கு உக்ர ஸ்ரீநிவாச மூர்த்திக்கு, கொலுவு ஸ்ரீநிவாச மூர்த்திக்கு ஸ்ரீ சீதா லக்ஷ்மண சமேதரான கோதண்டராம ஸ்வாமிக்கு, ருக்மணி சமேதரான ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமிக்கு சக்கரத்தாழ்வாருக்கு, சந்நிதியில் உள்ள சாளகிராமங்களுக்கு மலர்மாலைகளை அலங்கரிப்பர்.

புஷ்பமாலை அலங்காரம் முழுமை பெற்ற பிறகு வேதபண்டிதர்கள் மந்திர புஷ்பங்களை சமர்பிப்பர் அதன் பின்னர் தூப, தீப, நக்ஷத்திர ஆரத்திகள் காட்டுவர், இறுதியாக எம்பெருமானுக்கு கற்பூர ஹாரத்தி விமர்சையாக நடைபெறும். சுமார் அரைமணி காலத்திற்கும் மேலாக ஸ்ரீநிவாசனின் திவ்ய மங்கள மூர்த்தியை தரிசித்துக் கொண்டு பக்தர்கள் ஆனந்தப் பரவசம் கொண்டு, எம்பெருமான் திருச் சந்நதிக்கு வந்து வரிசையாக ஸ்வாமியை தரிசிக்கின்றனர். அர்ச்சக ஸ்வாமிகளின் அருளாசியுடன் சடாரியை பெற்றுக்கொண்டு ஆனந்த நிலைய விமான பிரதக்ஷிணம் செய்து வெளியே வருவர்.

## கொலுவு (தர்பார்)

தங்க வாயிலை ஒட்டி உள்ளே உள்ள அறையினை ஸ்நபன மண்டபம்' என்பர். இங்கே திருமலையானுக்கு பிரதிதினமும் ஆஸ்தானம் நடைபெறும். சந்நிதியில் உள்ள கொலுவு ஸ்ரீநிவாச மூர்த்தியை திருக்குடை திருவாலவட்ட மரியாதையுடன், மங்கள வாத்தியம் முழங்க ஸ்நபன மண்டபத்தில் வேயப்பட்டுள்ள தங்க சிம்மாசனத்தின் மீது கொலுவிருக்க வைப்பர்.

இம் மூர்த்திக்கு ஷோடஸோபசாரங்கள் நிர்வகித்து, தூபதீப ஹாரத்திகள் சமர்ப்பிப்பர். அதன் பின்னர் அர்ச்சக ஸ்வாமிகள் எம்பெருமானிடமிருந்து தாம்பூலம், தக்ஷிணையுடன் அரிசியையும் தானமாகப் பெற்று 'நித்யைஸ்வர்யோபவ' என்று ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமியை பக்தி பூர்வமாக பிரார்த்திப்பர். ஆஸ்தான பண்டிதர் ஸ்ரீநிவாச பிரபுவுக்கு பஞ்சாங்கத்தை வாசித்து அன்றைய திதி, வார, நக்ஷத்திர, யோக, கரணங்களை கூறுவார். அன்றைய உத்ஸவ விசேஷங்களை ஸ்வாமிக்கு தெரிவிப்பார்.

அதேபோன்று மறுநாள் திதி, வார, நக்ஷத்திரங்களையும் செவிமடுப்பர். நித்திய அன்னப்பிரசாத திட்டத்திற்கு சிறந்த அளவில் நன்கொடை வழங்கிய நன்கொடையாளர்களின் பெயர்களை எம்பெருமானிடத்தே வாசிப்பர். பொக்கசம் (கணக்கு) குமஸ்தா எம்பெருமானுக்கு சமர்பிக்கப்பட்ட முந்தைய

நாள் வருவாய் விவரங்களை, ஆர்ஜித சேவையின் மூலம், பிரசாதங்களின் விற்பனை மூலம், உண்டியல் மூலம், காணிக்கையாக வந்த தங்கம், வெள்ளி, செம்பு மற்றும் இதர உலோக பாத்திரங்கள், நகைகள், போன்றவற்றின் மூலம் வந்த நிகரவருவாயினை பைசா வோடு கணக்கிட்டு ஸ்ரீநிவாச மூர்த்திக்கு விவரமாக கூறி பக்திபிரபத்தியோடு சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி விடைபெறுவார்.

தினமும் கொலுவு ஸ்ரீநிவாசமூர்த்திக்கு ஏகாந்தத்தில் நடைபெறும் இந்த கொலுவு சேவையை மாதிரி ஆலயத்தில் சித்தரித்து சாதாரண பக்தர்களுக்கும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் இதை சமர்ப்பிக்கின்றது. சகல லோக வல்லமை படைத்தவனின் கொலுவினை கண்ணாரக் கண்டு களிப்பெய்துங்கள்.

## சஹஸ்ரநாமார்ச்சனை

திருமலை க்ஷேத்திரத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமிக்கு ஒவ்வொரு நாளும் மூன்று வேளை இந்த அர்ச்சனை சேவை நடைபெறும். உதயம் நடைபெறும் முதல் அர்ச்சனையின் போது ஸ்வாமியை சஹஸ்ரநாமா வளியுடனும், மதியம், மாலை நடைபெறும் அர்ச்சனையின் போது அஷ்டோத்த சதநாமாவளியுடனும் அர்ச்சிக்கப் படுகின்றது திருக்கோயிலில் காலை 4 மணியிலிருந்து 5 மணிக்குள் நடைபெறும். சஹஸ்ர நாமார்ச்சனைக்கு நிர்ணயிக்கப்பட்ட கட்டணம் செலுத்திய பக்தர்கள்

வைகுண்டம் க்யூ மூலம் சுவாமி ஆலயத்திற்குள் செல்கின்றனர். இப்பக்தர்கள் குலசேகரபடியிலிருந்து கருடாழ்வார் சன்னதி வரை பெருமாளை உட்கார்ந்து சஹஸ்ரநாமார்ச்சனையில் பங்கு பெறுவார்கள். எம்பெருமானின் திருவடி அருகில் வைகானச அர்ச்சகர் சுவாமி உட்கார்ந்து உலக நன்மையை வேண்டி திருமலையான் சகஸ்ரநாமார்ச்சனையை தொடங்குவர்.

புனிதமான பிரம்ம முகூர்த்தத்தில் திருமலையான் சஹஸ்ர நாமாவளி ஆலயத்தில் மட்டுமின்றி, திருமலை புண்ணிய க்ஷேத்திரம் முழுதும் கேட்கும்படி செய்து, பக்தர்களின் திருவுள்ளத்தில் அமைதியை பிரகாசிக்கின்றது. அதன் பின்னர் அர்ச்சகர்கள் எம்பெருமானின் திருப்பாதங்களை அர்ச்சித்த துளசி இலையால் ஸ்வாமியின் திருமார்பில் வீற்றிருக்கும் மஹாலட்சுமி தாயாரை அர்ச்சிக்கின்றனர். அதன் பின்னர் எம்பெருமானுக்கு நக்ஷத்திர ஆரத்தியை காண்பிப்பர். தேங்காய், வாழைப்பழம் நிவேதிக்கப்பட்டு கற்பூர ஆரத்தியையும் சமர்ப்பிப்பர். இத்துடன் இனிதே சஹஸ்ர நாமார்ச்சனை நிறைவுறுகிறது.

திருமலையான் எதிரே உட்கார்ந்து ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமியின் திவ்ய மங்கள திருமேனி அழகினை கண்குளிர பார்த்து ஆனந்தத்தில் மூழ்கிய பக்தர்கள் திவ்யானுபூதியுடன் சுவாமியின் பக்கத்திற்கு வரிசையாக சென்று கற்பூர ஆரத்தி ஒளியில் சுவாமியை தரிசித்து மெய்மறந்து போய் சுவாமியை மீண்டும் மீண்டும் திரும்பி பார்த்த வண்ணம் வருகின்றனர்.

அதன் பின்னர் எம்பெருமானுக்கு சக்கரை பொங்கல், புளியோதரை, பொங்கல் முதலான அன்ன பிரசாதத்துடன் லட்டு, வடை போன்றவற்றினையும் சேர்த்து நிவேதனம் செய்வர். இதற்கு முன்பே ஒரு பரிசாரகர் சுவாமி மடைப்பள்ளியிலிருந்து பிரசாதங்களை மேளதாள மரியாதையுடன் வராஹ சுவாமி திருக்கோயிலுக்கு எடுத்துச் செல்வார்.

திருமலை க்ஷேத்திர சம்பிரதாயப்படி ஸ்ரீவராஹ சுவாமிக்கு முதல் நிவேதனம் நடைபெறும். அங்கு நிவேதனம் நடந்த பிறகு இங்கு ஆனந்த நிலையத்தில் எம்பெருமானுக்கு நைவேத்தியம் நிவேதிக்கப்படுகிறது. அதன் பின்னர் அர்ச்சக ஸ்வாமிகள் சுகந்த திரவியம் பூசின தாம்பூலத்தினை பக்தியுடன் சுவாமிக்கு சமர்ப்பிக்கின்றனர்.

திருமலை க்ஷேத்திரத்தில் எவ்வளவோ பழமையையும் பெருமையையும் கொண்ட இந்த சஹஸ்ரநாமார்ச்சனை இன்று பக்தர்கள் மத்தியில் சிறப்பு வரவேற்பினை பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. இந்த அர்ச்சனை செய்தாலும், பார்த்தாலும், கேட்டாலும் பாவத்திலிருந்து விடுபடுவர் என்றும் சர்வதோஷங்களும் விலகும் என்று இந்நாமாவளி மஹாத்மியத்தை குறித்து நாரத மகரிஷி கூறியுள்ளார். இத்தகு சிறப்பு வாய்ந்த இந்த அர்ச்சனை சேவையை சாதாரண பக்தர்களும் காண வேண்டும் என்னும் நோக்கத்தில் திருமலையான்

அர்ச்சகர் சுவாமிகளால் மாதிரி ஆலயத்தில் நிர்வகித்து ஒளிபரப்பு செய்கிறது இந்த ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் பார்த்து மகிழுங்கள்.

## நித்திய கல்யாணோத்ஸவம்

ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை ஸ்ரீ மலையப்ப ஸ்வாமிக்கு நித்திய கல்யாணோத்ஸவம் நடைபெறுகிறது. இரண்டாவது அர்ச்சனை, மணி, நிவேதனம் பூர்த்தியான பிறகு திருமலையான் உற்சவ மூர்த்தியை சகல ராஜமரியாதையுடன் திருச்சி வாகனத்தில் ஆனந்த நிலையத்திலிருந்து சம்பங்கி பிரதக்ஷிணத்தில் உள்ள கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளப் பண்ணுவர் 15ம் நூற்றாண்டில், தாள்ளபாக்கம் வம்சத்தாரால் இந்த கல்யாணோத்ஸவம் ஆரம்பிக்கப்பட்டதாக கல்வெட்டு மூலம் தெரிகிறது. தாள்ளபாக்கம் வம்சத்தவரே இன்னும் கன்னியாதானம் பண்ணுவது குறிப்பிடதக்கது. உலக மக்கள் நலமுடனும் வளமுடனும் வாழவும் பெண்கள் இப்பிறவியிலும் அடுத்து பிறவியிலும் சுமங்கலிகளாக இருக்க வேண்டும் என்னும் மகா சங்கல்பத்தோடு ஏழுமலையானுக்கு கல்யாணோத்ஸவம் பண்ணுவது வழக்கம். இங்கு நித்திய கல்யாணம் பண்ணுவதாலே இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானை நித்திய கல்யாண சக்கரவர்த்தி என்றும் அழைக்கின்றனர். ஒவ்வொரு நாளும் நண்பகல் 12 மணி முதல் 1 மணி வரை நிர்வகிக்கும் இந்த நித்திய கல்யாண உத்ஸவத்தை ஸ்ரீ

வேங்கடேஸ்வரா பக்தி சேனல் ஒவ்வொரு நாளும் நேரடி ஒளிபரப்பு பண்ணிவருகிறது. கோடான கோடி மக்கள் பார்த்து மகிழ்ந்து வருகின்றனர்.

## டோலோத்ஸவம்

ஸ்ரீதேவி, பூதேவி சமேத ஸ்ரீ மலையப்பஸ்வாமி கல்யாணோத்ஸவத்திற்குப் பிறகு க்ருஹஸ்தர்களின் பிரார்த்தனைகிணங்க கண்ணாடி அரங்கத்திற்கு எழுந்தருளப்பண்ணுகின்றனர். இம்மண்டபம் நடுவில் அமைக்கப்பட்டுள்ள டோலில் (ஊஞ்சலில்) ஸ்வாமியை உபய நாச்சிமார்கள் சமேதராக ஊஞ்சல் சேவையை நிர்வகிக்கின்றனர். இம்மண்டப சுவரில் பதிக்கப்பட்டுள்ள கண்ணாடியின் எல்லா பக்கத்திலும் ஸ்வாமி திருக்காட்சியளித்து பக்தர்களுக்கு அருள்பாலித்து தான் எங்கும் பரந்துள்ள நிலையினை புரியவைக்கின்றார். இதன் பின்னர் கற்பூர நீராஜனம், பிரசாத விநியோகம் நடைபெறுகிறது.

ஒவ்வொரு நாளும் மதியம் 1.00 முதல் 2.00 மணிக்கு மத்தியில் நடைபெறும் இந்த டோலோத்ஸவத்தை ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனல் இதனை நேரடி ஒளிபரப்பு பண்ணுகிறது, கண்டு மகிழுங்கள்.

## ஆர்ஜித பிரம்மோத்ஸம்

உபய நாச்சிமார்களுடன் எழுந்தருளும் மலையப்ப ஸ்வாமிக்கு வாகன சேவையை நிர்வகிப்பது ஆர்ஜித பிரமோத்ஸவமாக அழைக்கப்படுகிறது.

நிர்ணயிக்கப்பட்டுள்ள கட்டணத்தை செலுத்தி பக்தர்களின் முன்னிலையில், மலையப்ப சுவாமியை வரிசையாக சேஷ, கருட, அனுமன் வாகனங்கள் மீது எழுந்தருளப் பண்ணுவித்து கற்பூர நீராஜனம் சமர்ப்பிப்பர்.

பிரதிதினம் மதியம் 2-3 மணிக்கு மத்தியில் வைபவோத்ஸவ மண்டபத்தில் நடைபெறும் இந்த ஆர்ஜித பிரம்மோத்ஸவத்தை ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனலில் நேரடி ஒளிபரப்பாகிறது, கண்டு மகிழுங்கள்.

## ஆர்ஜித வசந்தோத்ஸவம்

ஆர்ஜித வசந்தோத்ஸவத்திற்கு நிர்ணயிக்கப்பட்ட கட்டணத்தை செலுத்தி பக்தர்களின் முன்னிலையில் வசந்தோத்ஸவம் நடைபெறுகிறது. பால், தயிர், சந்தனம், மஞ்சள் முதலான அபிஷேக பொருட்களுடன் கண்ணிற்கு விருந்தாக அமையும் இந்த வசந்தோத்ஸவம் வைப வோத்ஸவ மண்டபத்தில் மாலை 3-4 மணிக்கு மத்தியில் நிர்வகிக்கப்படுகிறது. ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சேனலில் இந்நிகழ்ச்சியை நேரடி ஒளிபரப்பு பண்ணி பக்தர்களை ஆனந்தத்தில் ஆழ்த்துகிறது.

## சஹஸ்ர தீபலங்கார சேவை

உபய தேவிமார்களுடன் எழுந்தருளும் மலையப்ப ஸ்வாமி சர்வ அலங்காரத்துடன் வைபவோத்ஸவ மண்டபத்திலிருந்து கொலுவு

மண்டபத்திற்கு எழுந்தருள்வார் அதற்குள் திவ்ய உலகமாக ஒளிர்விடும் சஹஸ்ர தீபங்களின் இடையில் உள்ள ஊஞ்சலில் எம்பெருமான் உபய தேவிமார்களுடன் எழுந்தருளி பக்தர்களுக்கு திருக்காட்சியளிக்கின்றார். அச்சமயத்தில் வேத பண்டிதர்கள் வேத மந்திரங்களால் ஸ்வாமியை போற்றுவர். நாதஸ்வர வித்வான்கள் இனிய ஸ்வரமாக நாதஸ்வரத்தை ஊதுகின்றனர். அடுத்து பாடகர்கள் அன்னமாசார்யா சங்கீர்த்தனையாலும், புரந்தரதாச கீர்த்தனையாலும் எம்பெருமானுக்கு ஸ்வர அர்ச்சனை பண்ணுவர். வேத, நாத, கானங்களை கேட்டுக் கொண்டு மலையப்ப ஸ்வாமி மெதுவாக ஊஞ்சலில் ஆடியபடி பக்தர்களுக்கு சேவை சாதிக்கின்றார்.

திருமலையில் எண்ணற்ற பக்தர்கள் கண்ணுறும் இந்த சேவையை ஸ்ரீ வேங்கடேஸ்வரா பக்தி சானல் பிரதி தினமும் மாலை வேளையில் 5.30 மணியளவில் நேரடி ஒளிபரப்பு பண்ணி, லட்சக்கணக்கான பக்தர்களை ஆனந்தத்தில் ஆழ்த்துகிறது.

அதற்கடுத்து எம்பெருமான் சந்நிதியில் சாயங்கால பூஜை தோமாலை சேவை நடைபெறும். இந்த தோமாலை சேவைக்குப் பின்னர் அர்ச்சக ஸ்வாமிகள் எம்பெருமானுக்கு அஷ்டோத்தர சதநாமார்ச்சனை, திருமார்பு திருமகளுக்கு சதுர்விம்சதி

நாமார்ச்சனை பண்ணுவர். பின்னர் ஸ்வாமிக்கு நைவேத்யம் சமர்பித்து, தங்க வாயில் பக்கத்தில் உள்ள திருமாமணி மண்டபத்தில் உள்ள பெரிய திருமணி ஒரே நிலையில் கம்பீரமாக ஒலிக்கச் செய்வர். அதன் பின்னர் ஏகாந்தத்தில் நடைபெறும் சாற்று முறையில் ஜீயர் ஸ்வாமிகளும், ஏகாங்கி மட்டுமே பங்குபெறுவர்.

## ஆலயமணி மணியோசை

பிரதிதினம் மாலை வேளையில் எம்பெருமானின் நைவேத்தியத்தின் போது ஒலிக்கும் ஆலய மணியோசை இல்லந்தோறும் ஒலிக்க வேண்டும் என்றும் எண்ணத்தில் ஸ்ரீவேங்கடேஸ்வரா பக்தி சானல் பிரதிதினம் மாலை வேளையில் 7.30 மணி முதல் 8.00 மணி வரை இதனை நேரடி ஒளிபரப்பு செய்கிறது. இந்நிகழ்ச்சியினை பிரதிதினம் பார்க்கின்ற பக்தர்கள் திருமலை க்ஷேத்திரத்தில் உள்ள அநுபூதியை பெறுகின்றனர்.

## ஏகாந்த சேவை

எம்பெருமான் திருக்கோயிலில் இறுதியாக நடைபெறும் சேவை ஏகாந்த சேவை. தங்கக் கட்டிலை கொண்டு வந்து ஆனந்த நிலையத்தின் முன்பு உள்ள சயன மண்டபத்தில் வெள்ளி கொலுசில் தொங்கவிடப்பட்டு அதன் மீது பட்டு மெத்தை, தலை அணை அமர்த்துவர்.

திருமலையானுடைய பரம பக்தரான தரிகொண்ட வெங்கமாம்பா வம்சத்தவர்கள் அந்தத் தங்கக் கட்டிலைச் சுற்றி வைப்பர். தரிகொண்ட வெங்கமாம்பா சார்பில் சமர்பிக்கப்படும் முத்துஹாரதி தட்டினை, ஏகாங்கிக்கு அளித்து அவர் வெளியே வந்து விடுவார். சந்நிதியிடையர் இந்த கட்டிலின் முன்பு இரண்டு தீபங்களை ஏற்றி வெளியே வருவார்.

அர்ச்சக ஸ்வாமிகள் ராமர் மேடை கதவினை சாத்தி, தங்கவாயிலுக்கு திரையிடுவார். அப்பொழுது கருட மண்டபம் அருகே சன்னாயி மேளம் கேட்பதற்கு இனிமையாக வாசிக்கப்படும். ஆலயத்திற்குள் அர்ச்சக ஸ்வாமிகள், எம்பெருமானுக்கு உபசாரங்கள் பண்ணி, பல்வேறு பழங்களால் சர்க்கரை, தேன்கலந்து தயார் செய்யப்பட்ட பிரசாதத்தினை, சர்க்கரை, முந்திரிபருப்பு, பாதாம்பருப்பு, உலர்ந்த திராக்ஷை, ஏலக்காய், உலர்ந்த தேங்காய்த் துண்டு கலந்து தயார் செய்யப்பட்ட பஞ்சகஜ்ஜாயம் என்னும் பிரசாதத்தினையும் சர்க்கரை கலந்த சூடான பாலையும், நிவேதிப்பர். சுகந்த திரவிய வாசனைக் கலந்த தாம்பூலத்தினை சமர்ப்பித்து, கற்பூர நீராஜனம் சமர்ப்பிப்பர்.

அதன் பின்னர் அர்ச்சகஸ்வாமிகள் மறுபடியும் ஸ்வாமிக்கு பாத நமஸ்காரம் பண்ணி, அங்குள்ள போக ஸ்ரீநிவாசமூர்த்தியை பஞ்சசயனத்தின் மீது பள்ளி கொள்ளுமாறு பிரார்த்தித்து, கட்டிலின் மீதிருந்து பக்தர்களை காணும்படிக்கு தென்னிசை தலை வைத்தப்படி பள்ளி கொள்ளச் செய்வர்.

அதன் பின்னர் எம்பெருமானின் மூலமூர்த்திக்கு உள்ள தங்க திருப்பாதகவசங்களை விலக்கி, அவற்றின் மீது புது வஸ்த்திரத்தை வைத்து, அப்பொழுதுக்கப்பொழுதே அரைத்த இரண்டு சந்தன முத்தைகளை ஸ்வாமி பாதங்களுக்கு சமர்ப்பிப்பர். எம்பெருமானின் திருமார்பில் கொலுவிருக்கும் வக்ஷஸ்தல ஸ்வாமிக்கு ஒரு முத்தை சந்தனத்தை சமர்ப்பித்து, அரை முத்தை சந்தனத்தை பள்ளி கொண்டுள்ள போக ஸ்ரீநிவாசமூர்த்தி இதயத்தின் மீது வைப்பர். மற்றொரு அரை முத்தை சந்தனத்தை பிரம்மதேவன் அர்ச்சிப்பதற்காக எம்பெருமான் பாதங்களின் முன்பு தங்க வட்டிலில் வைப்பர்.

கோயில் உள்ளே இந்த ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்க பக்தர்கள், தங்கவாயில் முன்பு உட்கார்ந்து ஸ்வாமி தரிசனத்திற்காக எதிர்பார்த்துக் கொண்டிருப்பர்.

எல்லா உபசாரங்களும் முடிந்த பின்னர் போக ஸ்ரீநிவாசமூர்த்தியை பள்ளி கொள்ள வைத்து கதவினை திறப்பர். அந்த திவ்விய மங்கள தரிசனத்திற்காக காத்திருக்கும் பக்தர்கள் எம்பெருமானையும், பள்ளி கொண்டுள்ள போக ஸ்ரீநிவாச மூர்த்தியையும், ஆசை தீர தரிசித்து திளைப்பர். இதற்கு இடையில் தாள்ள பாக்க அன்னமாச்சார்யாவின் வம்சத்தவர்களில் ஒருவர் எம்பெருமானுக்கு எதிரே, ராமர் மேடை அமைந்துள்ள நடையில் உட்கார்ந்து தம்புராவை மீட்டிக் கொண்டு அன்னமய்யா பாடின தாலாட்டுப்பாட்டை பக்தியுடன் பாடுவார்.

"ஜோ அச்சுதானந்த ஜோ ஜோ முகுந்தாராவே பரமானந்த ராம கோவிந்தா" - என்று தொடங்கும் சங்கீர்த்தனயைப் பாடிக் கொண்டு எம்பெருமானின் யோக நித்திரைக்கு உதவிடுவர். தாள்ள பாக்கத்தாரின் தாலாட்டுப் பாடல் முடிந்த உடனே, தரிகொண்டா வெங்கமாம்பாவின் முத்து ஹாரத்தியை, திருவேங்கடமுடையானுக்கும், தங்கக் கட்டிலில் பள்ளி கொண்டிருக்கும் போக மூர்த்திக்கும் காட்டுவர்.

தரிகொண்டா வெங்கமாம்பாவின் கற்பூர ஹாரத்தி ஒளியில், ஸ்வாமி திவ்விய மங்கள விக்ரக சௌந்தர்யத்தை பார்க்கும் பக்தர்கள் அளவிலா ஆனந்தத்தில் கற்பூர ஹாராத்தியை கண்ணில் ஒத்திக் கொண்டு, திருவேங்கடமுடையானையும், போக ஸ்ரீநிவாச மூர்த்தியையும் திரும்பி திரும்பி பார்த்த வண்ணம் வெளியே வருவர். எம்பெருமானுக்கு நிவேதிக்கப்பட்ட இனிப்புமிக்க சூடான பாலினையும், பஞ்சகஜ்ஜாய பிரசாதத்தையும் பெற்றுக் கொண்டு உண்டி வழியாக வெளியே வந்து ஆனந்த நிலைய கோபுரத்தை நமஸ்கரித்துச் செல்வர். ஏகாந்த சேவைக்கு பிறகு யாரும் விமான பிரதிக்ஷணம் செய்யமாட்டார்கள். அச் சமயத்தில் அங்கு தேவதைகள் உலவுவதாக ஐதீகம்.

நீங்காத அநுபூதியையும், ஆன்மீக ஆனந்தத்தையும் அளிக்கும் இந்த ஸ்வாமி ஏகாந்த சேவையினை பக்தகோடிகள் பார்த்து பரவசமடைய வேண்டி மாதிரி ஆலயத்தில் எம்பெருமான்

அர்ச்சகஸ்வாமிகள் துணை கொண்டு இச்சேவையை நடத்தி, சித்தரிகரித்து உங்களுக்கு அளிக்கிறது ஸ்ரீவேங்கடேஸ்வரா பக்தி சானல்.

அதன் பின்னர் அர்ச்சகஸ்வாமிகள் பிரம்மா முதலான தேவர்கள் ஏகாந்தத்தில் எம்பெருமானை அர்ச்சிப்பதற்கு பிரம்மதீர்த்தத்தை அங்கு வைப்பர். உள்ளே யாராவது உள்ளனரா என்று சோதித்து, எம்பெருமானை பக்திபூர்வமாக பாத நமஸ்காரம் பண்ணிக் கொள்வர். தங்கக் கட்டிலில் சயனத்திலிருக்கும் போக ஸ்ரீநிவாச மூர்த்தியை கைகூப்பி வணங்கி, ராமர்மேடை கதவிற்கு தாளிட்டு தங்கவாயிலுக்கு வெளியே வருவர். அர்ச்சக ஸ்வாமிகள் வெளியே வந்த உடனேயே தங்கவாயில்கள் மூடப்படும்.

சுப்ரபாத சேவையின் போது தங்கவாயில்கள் எங்ஙனம் திறப்பரோ, அதே மாதிரி சந்நிதி இடையர், அர்ச்சகஸ்வாமிகள், ஜீயர் ஸ்வாமிகள் அதிகாரிகள் முன்னிலையில் தங்கவாயில்களுக்கு நான்கு தாழ்ப்பாள்கள் போடப்பட்டு பெரிய பெரிய பூட்டுகள், அவற்றிற்கு சீலும் வைப்பர். அதன் பின்னர் அனைவரும் துவஜஸ்தம்பம் வரை வந்தவுடன் வெள்ளி வாயிலையும் மூடி, தாளிட்டு சீல் வைப்பர். ஆலய ஊழியர்களும், பாதுகாவலர்களும் இந்த வெள்ளி வாயிலுக்கு வெளியே இரவு முழுவதும் காவல் காப்பர்.

அர்ச்சகஸ்வாமிகள் துவஜஸ்தம்பம், பலிபீடத்தின் பிரதக்ஷணமாக வெளியே சென்று, தம்மிடம் உள்ள சாவிகள் மற்றும் குஞ்சிச கோலினால் க்ஷேத்திர பாலகர் சிலையை தொட்டு பக்தியுடன் பிரார்த்தித்து மஹாத்துவாரம் கடந்து வெளியே செல்வார். இத்துடன் திருமலை எம்பெருமானின் நித்திய சேவைகள், ஆலய தினசரி நிகழ்ச்சிகள் நிறைவுறுகின்றன.

அதன்பின்னர் மஹாத்துவாரம் கதவுகளும் மூடப்படுகின்றன. அந்த சத்தமில்லாத அமைதியான சமயத்தில் பிரம்மா முதலான தேவதைகள்யக்ஷ கின்னர கந்தர்வர்கள் போன்றோர் கண்களுக்கு புலப்படாது வந்து ஸ்ரீநிவாசபிரபுவை சேவித்து செல்வதாக புராணகூற்று. பழங்காலந்தொட்டு இவ்விஷயத்தினை திருமலை க்ஷேத்திரத்தில் உள்ள பெரியவர்கள் சொல்வது சத்தியமான வாக்கு.

மனிதர்களாலும், பிரம்மாதி தேவர்களாலும் நிரந்தரமாக பூஜிக்கப்பட்டு அனைவருக்கும் முழுமையாக அருள் பாலித்து வருகின்ற திருவேங்கமுடையானுக்கு நிகரான தெய்வம் மற்றொன்று இல்லை. எதிர்காலத்திலும் இராது. அத்தெய்வத்திற்கு நிகர் அத்தெய்வமே.

ச்லோ: ச்ரியகாந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்தினாம்!

ஸ்ரீவேங்கடநிவாசாய ஸ்ரீநிவாஸாய மங்களம்!!

